உ

கடவுள்துணை.

—*—

# தேரையர் திருவாய்மலர்ந்தருளிய

## வெண்பா - நூறு.



இஃது,

களத்தூர்த் தமிழ்ப்புலவர்

வேதகிரிமுதலியாரவர்கள் குமாரர்

## ஆறுமுகமுதலியாரால்

பல ஏட்டுப்பிரதிகளைக்கொண்டு

பரிசோதித்து

## அ. வீராசாமிநாயுடு அவர்களால்

தமது

சத்தியநிதி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.



ஆனந்த ௵ - டிசம்பர் ௴.

# விளம்பரம்.

—※—

இதனால் சகலருக்குந் தெரிவிப்பதியாதெனில் சென்னபட்டணம் சிங்கான்கடைக்கெதிர்த்த டாபன்ரோட்டில்-௱௮௬-வது நெம்பருடைய புத்தகஷாப்பிலும், கும்பகோணம் பெரியகடைத்தெருவிலிருக்கும் உப்புக்கடை நாராயணசாமிநாயக்கரிடத்திலும், மதுரை புதுமண்டபத்தில் புத்தகவியாபாரஞ்செய்யும் சண்முகபிள்ளையிடத்திலும், திரிசிரபுரம் தேரடிக்கடைத்தெருவிலிருக்கும் தி. சபாபதிபிள்ளையிடத்திலும், பாலக்காட்டில் ஷாப்புக்கடைவைத்திருக்கும் அப்பாவுபிள்ளையிடத்திலும், பலவித தமிழ்கிரந்தங்களும், அகஸ்தியர்முதலிய பெரியோர்கள் திருவாய்மலர்ந்தருளிய வைத்தியசாஸ்திரங்களும் - ஆழ்வாராதிகள் அருளிச்செய்த திவ்வியப்பிரபந்தங்களும், கம்பராமாயணவசனமும், சில சோதிடசாஸ்திரங்களும், வேண்டியவர்கள் விலைக்குப்பெற்றுக்கொள்ளலாம்.

இப்போது நூதனமாயச்சிட்டிருக்கும்

புத்தகங்கள்.

மரணகண்டியென்னும்-ஜோதிஷசாஸ்திரம்.

நவக்கிரகசிந்தாமணியென்னும்-ஜாதகசூடாமணி.

அச்சிட்டுவரும் புத்தகங்கள்.

ஸ்ரீராமர்மகாவிந்தம்

கணிதாமிர்தமென்னும்-ஜோதிஷசாஸ்திரம்.

தேரையர்பெருநூல்காவியம்

தன்வந்திரிதைலம்

அஸ்வனிதேவர்வைத்தியம்

இங்ஙனம்.

அ - வீராசாமிநாயுடு.

உ

கடவுள்துணை.

# தேரையர் திருவாய்மலர்ந்தருளிய

## கியாழம்-நூறு



காப்பு;

அகிலமெங்குநிறைந்துநின்றஅரனார்பாதம்
ஆதிபராசத்தியெனுமுமையாள்பாதம்
தகையாகுங்கணேசனுடன்வடுகன்பாதம்
தங்கமகாமேருவில்வாழ்முனிவர்பாதம்
குகைதோறும்வசிக்குமகாசித்தர்பாதம்
குமரனெனப்புகழ்பெற்றமுருகன்பாதம்
தொகையாகப்பதினெண்பேர்பாதம்போற்றிச்
சொல்லுகிறேன்கியாழவகைநூறுதானே.



நூல்.

பித்தசுரத்திற்கு-கியாழம்;

வேறு;

புரானுஞ்சிந்தில்பற்பாடகம் பூசுஞ்சந்தம்விலாமிச்சு
கிகிவோக்கொம்புமிருவேலி சித்தாமுட்டியுடன்காசு
தகவேயொவ்வொன்றோர்கழஞ்சு தண்ணீரிருநாழியிலிட்டுச்
சுகமாய்க்காய்ச்சிக்குடிப்பீராற்சேரும்பித்தசுரந்தானே, (க)

வாதசுரத்திற்கு கியாழம்.

வேறு.

நூதவோரின்புறவடாதோடை
சொன்னசங்கன்வேர்சுக்குவிழிசுட்டி
மாதுளார்திப்பிலியும்பற்பாடகம்
வழுதலையுங்காலியுடன்சமனேகொண்டு
வேதுவிடநீர்நான்குமெட்டொன்றாக்கி
விதமுடனேதேன்கூட்டியிசைந்தேயுண்ணத்
தீதுபிசுரம்வாய்வுசுரம்வாதத்திற்
சேர்ந்தசுரமிவையனைத்துஞ்சேராதென்னே (உ)

சகலசுரத்திற்குங் கியாழம்.

வேறு.

தூதுவளைகிழாநெல்லி சங்கம்வேர்சுக்குத்தோடை
யேலத்தைநற்சிறுதேக்கோடுபேசுதிப்பிலியும்பின்னை
காதமாஞ்செவ்வியந்தோல் நல்லநீர்நாலொன்றாக்கி
வேதமாயருந்திட்டாக்கால் விட்டுப்போஞ்சுரங்களெல்லாம். ௬

சிலேட்டுமசுரத்திற்குக்கியாழம்.

ஆடாதோடைசிறுதேக்கு அருநெல்லைபாந்தகளாசங்கு
தோடைவேரும்பேராம்பல் சுக்குசேர்ந்தசமன்விளகு
வாடாநீர்வார்த்தெட்டொன்றாய் வருந்தத்தேனுமுடன்கூட்டி
போடாநீருள்கொள்வீராய்ப் போற்றும்சேத்துமசுரம்போமே.

வயிற்றுநோயிற்குகியாழம்.

வேறு.

இலக்குமிழ்வேர்சிறுதேக்குதேவதாரம்
நிலவேம்புபற்படாகம்கடுக்காய்சுக்கு
துலங்குமிகுமுத்தமொடுவசம்புநோய்ச்
சொன்னநீரிருநாழிசுவறக்காய்ச்சி
கலக்கமில்லாதேனதுவுங்கியாழத்தூட்டி
கலந்துநீயருந்திடவேயடியவையாம்
விலக்கரியவயிற்றுநோயுளைப்புதிரும்
வேதமுனிதானுரைத்தார்விளம்புங்காலே. (௭)

பித்தசுரத்திற்குக் கியாழம்.

வேறு.

இடித்தவத்திப்பட்டையுடனிசையுங்கதலிப்பழம்பிசைந்து
வடித்தநீரும்நெல்லிக்காய் வருத்துஞ்சாறுதான்கூட்டி
பிடித்துவறுத்துச்சிரகமும் பிரியமுடன்சர்க்கரைகலந்து
குடித்தவுடனேபித்தசுரம் குறுகாதோடிப்போய்விடுமே. (௮)

குளிர்சுரத்திற்குக்கியாழம்.

வேறு.

காவேளைவேலிப்பருத்திகஞ்சாங்கோரை
கற்றாழைமுடக்கொத்தான்கடியசுக்கு
தேவைமிகுசிறுதேக்குசிறுகாஞ்சொறி
சீர்வேம்பின்பட்டையதிலிருந்தவீர்க்கு

மேவுசங்கம்பட்டையுடன்பதக்குநீரில்
வெந்துகொள்ளச்சிலேத்துமத்தின்சுரங்களெல்லாம்
கோவைநறுங்கனிவாயாய்முனிவால்வந்த
குளிர்மாறல்சுரமீளுங்கொள்ளுகொள்ளே- (எ)

வாதசுரக்கியாழம்,

மிக்கசிற்றாமல்லிபேராமல்லிமுள்ளி
வில்லைகண்டங்காரிபாதிரிகோரைலோடு
தக்கநிலக்குமிழ்மூத்தநிலவேம்போடு
தருவாகைதிப்பிலியுமிளகுமல்லாற்
சுக்குமிகுநெருஞ்சிலொடுதொண்டைசிந்தில்
சுகமானபற்படகஞ்சரியாய்க்கொண்டு
பக்குவமாயிருநாழிநீரொட்டொன்றாக்கிப்
பருகில்வெகுவாதசுரம்பறந்துபோமே- (அ)

பித்தசுரக்கியாழம்,

வேறு.

மூத்தக்காசுபற்படக மூனையாம்விலாமிச்சிறுவேலி
சுத்தசுக்குசந்தனமுறு சுகமாய்க்காய்ச்சிக்குடிப்பீரால்
சித்தப்பிரமையுடன்பிறந்த தேனேமானேசிலேறுதலாய்
பித்தத்துடனேவந்தசுரம் பேசாதோடிப்போய்விடுமே. (கூ)

விஷசுரக்கியாழம்.

சுக்குகடுக்காய்நிலவேம்பு சொல்லுமாடாதோடைசிந்தில்
கைக்கும்புடலின்பொடியதுவுங் கதிக்கவொவ்வொன்றோர்கழஞ்சு
ஒக்கவொறுக்கியிருநாழி யுழக்காய்க்காய்ச்சியுண்பீரால்
தக்கவிஷத்தின்சுரங்களெல்லாந் தான்விட்டோடுந்தப்பாதே. (ய)

தோஷசுரக்கியாழம்.

சித்தாமுட்டிபசம்பயறு சிறந்தபடகம்வில்லையொடு
கொத்தமல்லிசமனாகக் குறுகநீர்விட்டெட்டொன்றாய
மெத்தப்பருகிப்பழவரிசி மெய்யாய்க்காய்ச்சிக்குடிப்பீரால்
நித்தந்துடர்ந்ததோஷமது நிலைவிட்டோடும்நிட்சயமே. (யக

பலசுரக்கியாழம்.

சிறுநாஞ்சொறிகுறுந்தொட்டி சிறந்தசுக்குசிந்திலொடு
மறுவாதோடைவேப்பீர்க்கு வருபற்படகஞ்சமன்கொண்டு
மறுகாநீர்விட்டெட்டொன்றாய் மறுகக்காய்ச்சிக்குடிப்பீரால்
குறுகாதோடுஞ்சுரங்களெல்லாம் கோடாகோடியோடிடுமே.

தாகசுரக்கியாழம்.

ஆடாதோடைபேய்ப்புடலு மடருளுசிந்தில்பற்படகம்
நீடாகண்டங்கத்திரிவேர் நிலவேம்புடனேநிறைசுக்கு
வாடாகுடிநீரெட்டொன்றாய் வடித்துத்தேனிற்கொள்வீரால்
கோடாகோடிசுரம்விட்டுக் குளிருந்தாகசுரம்விடுமே. ௰௧

அதிசாரசுரத்திற்குக்கியாழம்.

வேறு

நெற்பொரியுப்பசும்பாலும்வில்வமூலே
நெரியசிறலமுடனெல்லிமுள்ளி
முற்படவேயிருநாழிநீரெட்டொன்றாய்
முதிர்நீரையிறுத்துமேகொள்வீராகில்
சொற்பெரியசத்திருண்மமதிசாரசுரமுந்
துயரமதாக்கிறுகிறுப்பு வழலைமூச்சு
நற்பெரியமுனியுரைத்தபடியெந்நாளும்
நாடாதென்றேயுரைத்தநலமிதாமே. (௰௨)

இதுவுமது.

வேறு.

முசுமாதளம்பிஞ்சிதிவிடையம் முத்தக்காசுபெருமரத்தோல்
தகைசுக்குடனேவிளாங்காயும் சமனாயொவ்வொன்றோர்கழஞ்சு
வகையாய்க்கூட்டியிருநாழி யுழக்காய்க்காய்ச்சிவைத்தருந்த
பகையாய்வந்தஅதிசாரம் பாரீர்பாரீர்போய்விடுமே. ௰௩

நாலுநாள் மாறல்சுரத்திற்குக்கியாழம்.

வேறு.

மாவட்டிபுசப்நாவற்கொழுந்துபுளியாரை
வன்குறிஞ்சிநறுணிணிலைகருவாழைப்பூவுந்
தாவுவகைக்கோர்கழஞ்சுஇருநாழிநீரில்
தகைகளையாயுழக்காசக்காய்ச்சிக்கொண்டு
பூவில்வருந்திப்பிலியும்வெண்காரக்கூட்டிப்
பொடித்துமேகியாழத்திலிட்டருந்த
தாவில்வருந்தாகமோடதிசாரசுரமுந்
தயவில்லாநாலுநாள்மாறல்சுரம்போமே. (௰௪)

அதிசாரசுரக்கியாழம்.

வேறு.

ருவாக்கதலிப்பூமுத்தக் கழற்விடத்தாரிக்கொழுந்துதெங்கி
னுருவாம்பாளைபெருமாதத்தோல் ஒளிமாதளம்பிஞ்சிருகழஞ்சு
நருவாம்நீர்வார்த்தெட்டொன்றாய் சாருமிலவம்பிசின்விடையம்
பொருமாத்திரையாய்க்கொண்டக்காலதிசாரங்களொழிந்திடுமே (௰௭

இதுவுமது.

வேறு.

மாதளங்கடம்புபுக்கின் வாய்த்தவேர்திப்பிலியத்தி
பீதிளங்கொழுந்துசுக்கு திரிபலைவிருப்பிக்கூட்டி
நீதிப யிரண்டுநாழி நீருழக்காக்கிக்கொண்டால்
ஞூதிளமூலையினனே சுரத்ததிசாரம்போமே. (௰௮)

இதுவுமது-வேறு.

தெங்கின்பாளைமொட்டுமுக்கஞ் சிதறவிடித்துத்திறமாகப்
பொங்குமுலைமேற்புட்ட ரக்கிப்பிழிந்துதேனுமுடன்கலந்து
எங்கும்புகழுமதிவிடையம் இலவம்பிசினுமிட்டருந்தப்
பங்கப்படுத்துமதிசார சுரத்தைப்போக்குஞ்சொன்னோமே. (௰௯)

இதுவுமது.

மூடித்துக்கனத்தகருங்குழலாய்முத்தக்காசுமாப்பட்டை
இடித்துநனைத்துப்பிட்டாய்ச்சுட்டி ரசப்பிழிந்திட்டதிவிடையம்
கடித்தவிலவம்பிசினோடு தகைமைபெறவேகொள்வீரால்
துடித்துவீழுமதிசாரசுரத்தைப்போக்குஞ்சொன்னோமே. (௨௰

தாபசுரக்கியாழம்.

வேறு.

ஏலமதிமதுரஞ்செக்கழுநீர்கோஷ்டம்
விலாமிச்சுயிருவேலியிலைசந்தசுக்கு
மூலமிருஞ்சந்தனநன்னாரிமுத்த
முதுபடகஞ்சமன்கூட்டிமுன்னீர்விட்டு

கோலமுடனெட்டொன்றாய்க்காய்ச்சிப்பின்னை
குடித்திடவேபித்தமுடன்குறவேர்வோடு
காலமிகுதாபசுரந்தீருமென்று
கருணையுடன்முனியுரைத்தார்காணலாமே. (உக)

சத்திசுரக்கியாழம்.

வேறு.

வில்வவேர்சங்கொடு விளாநன்னாரியும்
புல்லுவேர்ப்பயறொடு பொரியும்வெல்லமும்
நல்லநீர்சுறுணியை நாழியாக்கிய
சொல்லநீர்வாந்தியுஞ் சுரமுஞ்சோருமே. (உஉ)

சன்னிவாதசுரக் கியாழம்.

வேறு.

ரத்தசுக்கோடரத்தையெருக்கம்வேர்
நாத்தநொச்சிக்கொழுந்துஞ்சமனதாய்ச்
சேர்த்துநீருழக்காக்கித்தினங்கொண்டால்
மாத்தலாஞ்சன்னிவாதசுரங்களே. (உங)

உட்சுரத்திற்குக்கியாழம்.

வேறு.

முன்னைபாதிரியுமுள்ளி முதிர்கண்டங்காலிகோரை
பின்னைதூதளையுஞ்சீந்தில் பேராமுட்டிசித்தாமுட்டி
சொன்னகாஞ்சொறியுந்தோடை துளசிவேப்பலகுரோணி
தன்னிலக்குமிழ்புடோலும் நல்லவாலுழுவைகூட்டே. (உச)

கூட்டுவெட்பாலைவித்து கோஷ்டநற்கொத்தமல்லி
வாட்டியஅரத்தையோடு மகாமுமேலந்தானும்
நாட்டியதிரிகடுகோடு நற்றிரிபலையுங்கொண்டு
நீட்டிநீரொட்டொன்றாக்கிச் செலுத்தவுட்சுரங்கள்போமே. (உரு)

மாந்தசுரக்கியாழம்.

வேறு.

சிறுதேக்குதோடையொடுகஞ்சாங்கோரை
சேர்முதியார்கூந்தல்சிறுகுறட்டைசேர்த்து
உறுசிறுகாஞ்சொறிமுள்ளி சாரணைத்தி
யுற்றநீர்முள்ளிமட்டி யிரண்டுமொன்றா

மருவுமூக்காவேளைவக்கணுவும்
வளரும்பாவட்டைபுங்கோடமுதலல்லி
குறுகுமுறுவலியாணுவேர்நன்னாரி
கொத்தமல்லிசுக்குமுத்தக்கூட்டிடாயே. (௨௬)

முத்தமால்காந்தியொடுகண்டங்காலி
முகிர்மட்டகம்வசம்புமுதல்மூன்னீர்விட்டு
சுத்தமாகக்காச்சியெட்டொன்றாகச்
சுகமானசீரகமுந்துலக்கக்கொண்டு
மற்றுநாள்முதலாகவடித்துக்கொள்வாய்
மானேயிப்புவியில்வளர்மாந்தர்க்கெல்லாஞ்
சித்தமாஞ்சுரங்களெவகுசோபம்வீக்கந்
தீராதரோகங்கள்தீர்ந்துபோமே. (௨௭)

குளிருக்கு கியாழம்.

வேறு.

ஆடாதோடைநன்னாரி அகிலுஞ்சிறியவமுதலையும்
பாடாதிலக்குபற்படகம் பங்கம்பாளைவேர்க்கொம்பு
சேடாசீந்தில்சந்தனமுஞ் செப்பவரியதிவையனைத்தும்
கூடாதீர்விட்டெட்டொன்றாய் குடித்தார்சுரத்தைவிடுத்தாரே. (௨௮)

மாந்தசுரத்திற்குக் கியாழம்.

சீந்திற்றண்டுக்கடுக்காயுஞ் சிவதைவேருக்களிப்பாக்கும்
காந்தஞ்சுக்குரோகணியும் கன்னிச்சருகுக்கலந்துகொண்டு
ஏந்தமுலையாய்நீர்விட்டு எட்டொன்றாக்கிக்குடிப்பீரால்
மாந்தமானசுரந்தீரும் வயிறுங்கழியுங்கண்டாயே. (௨௯)

சுரத்திற்கு கியாழம்.

செட்டிச்சீந்தில்நிலவேம்பு சிறுகாஞ்சோறிகொத்தமல்லி
வட்டத்திருப்பிமுத்தமொடு மகிழ்ந்தபோற்றுய்விலாமிச்ச
வெட்டிப்பொருதுமமூதாரி யுடனேகூட்டிநீர்விட்டு
இட்டமுடனேயெட்டொன்றாய்ச் செலுத்தச்சுரங்கள்சேராதே (௩௰)

இதுவுமது.

சேர்ந்தசெக்கழுநீர்க்கிழங்கு சிறுவழுதகலையும்விலாமிச்சு
சார்ந்தவெலிபொன்முசுட்டை தன்றோடொக்ககொத்தமல்லி
வாய்ந்தமுத்தப் நிலவேம்பு வளர்பற்படகஞ்சந்தனமு
மேந்தநீர்விட்டுழக்காக்கி யிறுத்துக்குடிக்கச்சுரம்போமே. (கக)

வெதுப்புசுரத்திற்கு கியாழம்.

சிந்தில்வேரும்விலாமிச்சு சிறுகாஞ்சோறி பற்படகம்
வாய்ந்தமுத்தங்கொத்தமல்லி வளர்சுக்குள்ளிநிலவேம்பு
சேர்ந்தபத்துக்குடி நீராய்ச் சிறுகக்காய்ச்சிக்குடிப்பிரால்
வேய்ந்தவெதுப்பைவிடுவிக்கும் விடாதால்விதியின்கொள்கையிதே()

மலக்கட்டுதீர கியாழம்.

வெண்பா.

பாதாளமூலி பழமறையோன்றேவியரன்
நீதாகப்பச்சிவத்தில் சேர்ந்தாளும்-போதுகமிதி
தென்னலங்கன்மாதே சிறுகநீர் நாலிலொன்றாய்
வன்னியுடன்போமே மலம்! (கங)

சுரத்திற்கு கியாழம்.

வேறு.

கொட்டைக்கரந்தைபாவட்டை கூறும்பிரமிசுழற்கொழுந்து
ஒட்டிக்கொள்ளுமாடாதோடை யுவக்கும்விழியிலையாறுங்
கட்டிக்கொள்ளுங்காச்சலுக்குக் கியாழம்வைத்துக்குடிப்பிரால்
விட்டுப்போகுஞ்சுரங்களெல்லாம் வேறுமருந்துவேண்டாமே. (கச)

இதுவுமது.

கழிக்தாய்தாரங்கொத்தமல்லி கடியனுச்சுவெண்கோட்டம்
வெடித்தார்சுக்குநிலவேம்பு மிரண்டுமட்டியுடன்கூட்டிப்
பொடித்துனாக்கிநீரிலிட்டுப் பொங்கக்காய்ச்சியெட்டொன்றாய்
குடித்தார்தம்மைச்சுரம்விட்டுக் குடிபோமென்றுகூறியதே. (கரு)

## இதுவுமது-வேறு-

காரமட்டுக்கருங்குழம்செய்யவாய்
வாரமட்டுறும்வன்முலைமாதுகேள்
போமட்டியுஞ்சுக்குங்குடித்தக்கா
ஓராவிட்டிணியோடுஞ்சாக்களே. (௫௬)

## சத்திக்கு கியாழம்.

வில்வப்பத்திரிவேர்சிறுமட்டியும்
வல்லசுக்குவனம்பெறக்காய்ச்சியே
நல்லதேனில்நயந்தேகுடித்திட
கொல்லவந்திடுஞ்சத்திதுறுகுமே. (௫௭)

## இருமலுக்கு கியாழம்.

இண்டிலைதூதளை யிசங்குதிப்பிலி
கண்டரிசுக்குடன் கலந்தவெந்தநீர்
உண்டிடிலொருதா மிருமலுற்றிடில்
தெண்டமுந்தருவன்யான்தோனல்லவே. (௫௮)

## சூலைக்கு கியாழம்,

வேறு;

கழல்மணிவெள்ளையுள்ளி முருக்கத்தோல்வசம்புதேறும்
பழகியசுக்குத்தேறும் வருப்பிணிஞழக்காய்க்கொள்ளக்
குழலிடையோசைபோகுங்குமுறிடுங்குடலின்வாதம்
பழகியசூலைதானும் பற்றிடாதோடிப்போமே. (௫௯)

## வயிற்றுநோயிற்கு கியாழம்.

இருபலைமுக்காவேளை இசைந்தசுக்குத்தனியாக
ஒருபடிதண்ணீரொட்டி லொன்றாய்க்காய்ச்சிக்குடித்திடவே
பெருகியகிராணிவாய்வு பெலத்திடுங்குன்மரோகம்
பொருவதுதேகம்விட்டுப் போவதுதிண்ணந்தானே. (௬௰)

## இதுவுமது.

முருங்கைக்கிழங்குகொடிக்கழல்வேர்முதசாரணைவேர்வெள்ளுள்ளி
நெருக்கித்தழைத்தவசம்புடனேநெருப்பின்மிகுந்தகொடுவேலி

பொருங்கத்தேய்த்தபெருங்காயமுடனேகாய்ச்சிக்கொள்ளீரகம்
மருங்கிற்சூழ்ந்தநோய்களும்போம் வயிற்றுவலியுமாறாதே (௪௧)

நீரிழிவுக்கு யமகம்.

வேறு.

நல்லவெல்லம்பழந்தண்ணீர் நாழிநீர்
வில்வப்பத்திரிபட்டையகிழ்ந்தண்ண
தொல்லைவாரிசுவறிடுநீரிழி
வில்லையில்லையிராமன்கையாணையே. (௪௨)

இதுவுமது.

ஆவாரந்தளிர்கல்மதக்கொன்றைவேர்
நீர்விளைந்துபுளிமோரிலுண்டிரால்
தீவிளைந்தவரினுந்திரைகடல்
காவிளைந்தவரினுங்கடக்குமே. (௪௩)

இதுவுமது-வேறு.

ஆவாரங்கொன்றைநாவ லலைகடல்முத்தங்கோட்டம்
மேனியமருதந்தோலும் விளைந்துடனெக்கக்கொண்டு
பூவிரிகுழலினாளே பொருந்தநீர்தன்னையுண்ணக்
காவிரிநீரும்வற்றி கடல்களும்வற்றுந்தானே. (௪

இதுவுமது-வேறு.

திருந்தியவிளாவாவாரை செட்டிபவாட்பூலாவேர்
மருந்திறவிலந்தைகாட்டு மல்லிகையிலையுங்கூட்டிப்
பொருந்தவேமேதிமோரில் புசழ்படவேகவைத்து
அருந்திடவெடுத்துநீரு மகன்றிடுஞ்சலங்கடானே. (௪

வெண்பா.

தேற்றான்விதைகடுக்காய் செப்பரியாவாரைவித்து
ஏற்றவிளாம்பிசின்றேடித்தனையும்-கோற்றொடியாய்
பங்கொன்றுகாலாய்ப் பசுவின்மோரிற்பருகப்
போக்கிவருநீரிழிவுபோம். (௪௯)

விஷசுரம்-மாந்தம்-தோஷம்-உலமேகந்தீரக்

குடிநீர்.

வல்லசுரம்போ மாந்தமொடுதோஷம்போஞ்
சொல்லவெருமேகம்போஞ்சோகைபோம்-நல்லாய்கேள்
தாலவெல்லஞ்சுக்குடனே சாற்றுநிலக்குமிழுங்
காலமேகாய்ச்சியுண்ணக்கால். (சஎ)

உப்பிசந்திர கியாழம்.

வேறு.

கீழாநெல்லிவேர்கழஞ்சு இளாபொற்கடுக்காயிருகழஞ்சு
காளாமிளகுமுக்கழஞ்சு கடுகப்புளித்தமோருடனே
தாளாதுண்ணமண்ணகலுந் தழைத்தவயிறுந்தளர்வாகும்
ஆழ்வாருண்டநீயென்று அரனாருளிச்செய்ததுவே. (சஅ)

இதுவுமது.

வேறு.

சோற்றுக்கஞ்சியிற்சுக்கையரைத்தமே
தேற்றியிருழக்கோருழக்காக்கியே
ஊற்றியூற்றியுறிஞ்சிக்குடிப்பீரால்
நீற்றுப்பாண்டமுநீருண்ணும்பாண்டமே. (சகூ)

சோபந்திர கியாழம்.

முருங்கிலிமாவிலைமுள்ளிதுநனை
வரியுரிமணலிநன்னாரிகோவைபோ
டிரியுரிகாடியிலொக்கக்கூட்டிடும்
சுரிசுரிசுரும்பெனசோபமாறுமே. (ருய)

இதுவுமது.

வேறு.

பெருமரப்பட்டைநன்னாரி பெருத்தகுடசப்பாலையுடன்
வருமாதளையும்பொன்முசுட்டை மருவும்வில்வவெட்டிவேர்

தருவிலாமிச்சுழுத்தமொடு நந்தசீந்திலதிவிடைய
மருளாமிதனிற்காட்டாத்தி யதிகக்கிராம்புமருந்திடுமே (நக)

நீராடைப்புதிர வியாழம்.

வெண்பா.

மானேகேள் நீராடக்கில் வாழும்பசறியுடன்
தானேநற்கத்திரியின் றனிகளையும்-பானைதனில்
ஒக்கக்கியாழமிட்டு ஒதம்வெங்காரமிட்டுண்
கக்கிக்கடலுடைக்குங்காண். (நஉ)

மூர்ச்சை-சன்னி-சாந்திர கியாழம்

வேறு.

பேருவாகைபெருங்குமிழ்வேரொடு
பாரில்முன்னையும்பாதிரிவேரொடு
காவாசிங்கிகத்தாரிநெருஞ்சில்வே
ரீர்மல்லிகைவதசமூலமே. (நங)

வேறு

கதிரோனைவேதசமூலக்கியாழத்தாற்பிணிநீக்கிடவே
சதிராம்வாகைகுமிழ்முன்னை சாற்றும்பாதிரிவில்வமுடன்
புதியமிளகுகறிமுள்ளி போற்றுநெருஞ்சிலிருபல்லி
முதிரக்காய்ச்சிக்குடிப்பீரால் மூர்ச்சைசன்னிசுரமாறும் (நச)

திரிதோஷம்-சன்னிதோஷம் பிரதாபமூர்ச்சைதிரக்

கியாழம்.

வேறு.

சீர்பெரியவேருவகைபெருங்குமிழ்முன்னையொடு
சிற்றாமல்லிப்பாமல்லி
சீரானபாதிரிநெருஞ்சிசிறுவழுதலை
திடமானகூவளையுடன்
பாரினிற்புகழ்பெற்றகோஷ்டமொடுயர்சுக்கு
பகர்காஞ்டங்கத்திரியுமே
பாலினுந்தேனினுமினியசொல்லைப்பெற்ற
பைங்கொடிகருங்கூந்தலாய்

ஏர்பெறும்மருந்தெலாஞ்சமனுயிடித்துமே
யிதமாயுலர்த்திமென்ள
இருநாழிநீரில்விட்டெட்டொன்றாய்க்காய்ச்சியே
யியலாயருந்தவிரால்
வார்பெரியதிரிதோஷம்சன்னிதோஷங்களும்
வளர்பிரதா மூர்ச்சை
வாராதவாராத அஷ்டகசமூலமித
வகையதாயுண்டவர்க்கே (ரு0)

பல்வலிதீரக் கொப்பளிக்கக்கியாழம்.

வெண்பா.

மருக்காரைசுக்கு மருதநீதோல்வெள்வேல்
எருக்காவரைபிரம்போடேழும்-நறுக்கியே
நாலிலொன்றாய்க்காய்ச்சிநாலுநாள்கொப்பளிக்கப்
பாலன்பல்லாக்கிழவன்பல். (ருக)

பல்வலிதீரப்பொடி.

வேறு.

காசுக்கட்டிபலமொன்று கனத்தகடுக்காய்பலமுமாமே
நீசிக்கானவித்துப்பு நிகழுமாசிக்காயுடனே
பாசமானபடிகாரம் பகரொவ்வொன்றுகாற்பலமா
யிசத்துடனேபொரித்தெடுத்தேயிதமாய்ச்சினக்காதத்தே (ருஎ)

ஏகமாகயிவையெல்லாமிடித்துச்சூரணமாய்ச்செய்து
தேகத்திதமாய்த்தந்தத்திற் றினமுநன்றாய்த்தேய்த்திடவே
வாகையானமுகவாதம் வளரும்பல்லின்கடுப்படக்கும்
ஏகமானதந்தத்தை யிறுக்கிப்பிடிக்குங்கண்டாயே. (ருஅ)

வெப்புசுரந்தீரக்கியாழம்.

கொன்றைதீதோலுங்கொத்தமல்லி குமரிச்சருகுங்கடுக்காயும்
ஒன்றக்காய்ச்சிரோகணியு மொக்கக்கலந்தகுடிப்பீரால்
கண்ணிற்கிடந்தமலத்திரட்டுங் கட்டுக்கழியும்வகைசேர்ந்தோம்
விண்ணிற்பெரியவேந்தர்க்கும் வெப்புஞ்சுரமும்வாராதே. (ருகூ)

இதுவுமது.

வெண்பா.

கூறுகின்றபாவட்டை கொன்றைசிறுமட்டியுடன்
வீறுவேலிப்பருத்தி வேரிவையிற்-காறுகின்ற
நன்மிளகுங்கூட்டி நலமாய்க்கிழாழுமிடச்
சென்மத்திலில்லைசுரஞ்செப்பு. (௬௰)

கிருமிசுரந்தீரக்கியாழும்.

பிறிந்தவிளவென்னீரிற்பின்முதியார்கூந்த
லறிந்தசதன்வேளையைத்துந்தின்னப்-பறிந்துவிடுங்
குன்மமடைந்தும்போங்குளிருஷ்ணதாகம்போங்
கன்மகிருமிச்சுரம்போங்கண்டு. (௬௧)

இதுவுமது.

வேறு.

கொட்டைச்சீந்தில்நிலவேம்பு சிறுகாஞ்சோறிபாவட்டை
நட்டிப்பொருதயமுதாரியுடனேகூட்டி நீர்விட்டு
சட்டித்தேனிலின்சொல்லாய் கார்போல்தழைத்தகருங்குழலாய்
திட்டத்துடனேயெட்டொன்றாய்ச்செலுத்தச்சுரங்கள்சேராதே.(௬

விளைவாதந்தீரக்கியாழும்.

வெண்பா.

காணுப்புனல்முருங்கை சுழற்சிக்காயின்பருப்பு
பூணுங்கொத்தானுடனே போந்தசுக்கு-வேணுமெனப்
பண்ணீர்கியாழும் பருகிர்பருகியபின்
விண்ணில்விளைவாதம்போம்விட்டு. (௬௩)

அரோசிககிராணிதீரக்கியாழும்.

விட்டவோதியீர்க்கு மேவுகருவேப்பீர்க்கு
மூட்டசுக்குசீரகமுமோத்கமும்-தட்டியிட்டுக்
காய்ந்தநீளைக்கொள்ளக் காணுமரோசிகமும்
மாய்ந்தகிராணியும்போம்பார். (௬௪)

## தேரையர்-கியாழம்.

### விரைவாதந்தீரக்கியாழம்.

T. 12942

### வேறு.

முதியார்கூந்தல் கொடிவேலி
முருங்கப்பட்டை குளவிந்தன்
கொதியாய்வெந்த கழல்பருப்பு
கொள்ளுக்காணச் சாறுடனே
விதியால்வந்த விரைவாதம்
வெறுமைகண்டவேசியைப்போல்
குதியாதாகில் புத்தகத்தைக்
கொடுப்பேனதியில்விடுப்பேனே. (௧௫)

### அண்டவாதந்தீரக்கியாழம்.

### வெண்பா-

அலையுங்கருவளையலார்க்கப்பொடிசெய்து
சிலையுமிளகுபொடிசேர்சரியாய்-மலையிற்
பெருங்காயங்காட்டியுண்ணப்பெருமண்டவாதம்
வரும்பானைபோல்வீக்கம்வாடும். (௧௬)

### இரத்தபித்தந்தீரகியாழம்.

விட்டவொதியேர்க்கு மேவுகருவேப்பிர்க்கு
பொட்டநற்றேருடையிலைபொரிந்ததொரு-முந்திரிகை
யாரக்காரங்கூட்டியருந்தீருந்தியபின்
காரிரத்தபித்தமோடும். (௧௭)

### இதுவுமது.

போகுங்காண்ரத்தபித்தம்போய்விடவேதான்மருந்து
ஏகவேகுலைதீறுகால்பலமும்-நாகமாம்
நிம்பழச்சார்வாங்கி நெகவளைத்தரைப்படியா
வின்பாலிற்கொள்ரத்தபித்தமோடும். (௧௮)

## தேரையர்-யமகம்.

### இதுவுமது.
### வேறு.

அறுகம்வேரு மஞ்சிட்டி
அதிவிடையங்குங்குமப்பூ
இகழுமதுரா முந்திரிகை
விலாமிச்சசந்தனமிலுப்பைப்பூ
திகழும்நெய்தற் கிழங்குமதில்
செஞ்சந்தனந்தாமரைவளையம்
திகழ்வெள்ளறுகு வேர்சர்க்கரை
சேருமுத்தக்காசுடனே. (௬௯)

உகமேயொவ்வொன் றோர்சமஞ்சு
உகந்தாவின்பால்நாழி
செகமாய்முன்னாய் நெய்கூட்டிச்
சேரப்பதமாய்வடித்துண்ண
ஆகமேநாணி யன்னங்கள்
அஞ்சிப்பதுங்கும்நடையுடையாய்
தகமாயிரத்தவாந்தியுந்தான்
சலித்துப்போகுங்கண்டாயே. (௭௰)

### இதுவுமது.

அறுகஞ்சாறு நான்குறுணி
யகமேயாவின்பால்குறுணி
திகழும்நெய்தா னிருநாழி
சேரப்பதமாய்வடித்தபின்பு
அகலும்நாசியி லுதிரந்தோன்றி
லதுவேநசியஞ் செய்திடுவாய்
இகலுஞ்செவியி லுதிரந்தோன்றி
லிதனைக்காதில்விடுவாயே. (௭௧)

இதமாய்விழியி லுதிரந்தோன்றி
லிதமாய்க்கண்ணில்விட்டிடுவாய்
பதமாய்த்தண்டி லுதிரந்தோன்றில்
பதமாய்த்தண்டில்தான்விடுவாய்

சதமாய்மயிர்க்காலுதிரந்தோன்றில்
சதமாய்மேலெக்கும்பூசிடுவாய்
விதமாய்த்தோற்றும்ரத்தபித்தம்
விட்டோடிப்போமிதுதானே. (எ௨)

வெண்பா.

நன்றாகவேர்க்கொம்பு நற்சாரணைவேரு
மொன்றாய்க்கியாழமிட்டுண்டக்கால்-நன்றாக
ஒருமோதிதமொளியாமல்நாடுவிட்டு
வாடுமேகேட்டு மனமே. (எ௩)

சீத்சுரந்திர கியாழம்.

வேறு.

பாதிரியும்பெருக்குமிழுமுன்னைமூத்தம்
பற்படகஞ்சிறுதேக்குகண்டங்காலி
ஓதரியசிற்றாமல்விகடுக்காய்சுக்கு
ஒக்குந்தாமரைவளையம்போமல்லி
நீதிசிறுவழுதலையும்வில்வவேரும்
நெருஞ்சிவேர்சமனாகக்காய்ச்சிக்கொள்ள
சீதசுரம்வாதசுரஞ்சனிபோமென்றீசன்
தெளிந்தநூலுரைத்ததிதுதிண்ணந்தானே. (எ௪)

கரப்பான்றிர கியாழம்.

வெண்பா.

கூசுசெங்கத்தாரிட்டை கூர்மிளகுசின்னியுடன்
விசுஞ்சிறுகுறிஞ்சான்வேர்கூட்டி-காசினியி
லெண்ணியிடவேருடி நீ ரேற்றும்பலகரப்பன்
றின்னமுடன்போமேதினம். (எ௫)

விக்கந்திர கியாழம்.

தினந்காளிசங்குசுனை சிறுநெருஞ்சியிஞ்சி
மனத்தாலநீர்முள்ளிமாமலையிற்-கனத்துவரின்

வெண்காரமென்பொடியா மேவுகுடிநீரருந்தக்
கண்காணவீக்கம்போம் காண். (௭௬)

கிராணிதீர இயாழும்,

செந்தங்கொத்தபல்லிசுக்கு கொடிவிலாமிச்சுமுத்தஞ்
சந்தவில்வப்பிஞ்சு சமனாய்க்-குளிர்ந்த
சலம்விட்டுக்காய்ச்சி தானேநீர்கொள்ளப்
பெலத்துவருங்கிராணிபோம் பேசு. (௭௭)

வாந்திதீர இயாழும்.

வேறு.

சுத்தநெற்பொரியுஞ்சுக்குந் தொத்துகூவிளம்வேர்கூட்டி
இத்தறக்காய்ச்சிக்கொண்டு இசையவேகுடித்தபோது
சத்தியுக்குமருளப்புந் தாகமுந்தீருமென்று
வித்தகமுனிவர்தானும் வேண்டியேவிளம்பினாரே. (௭

இதுவுமது.

பயத்தினிலுமியைப்போக்கிப் பரிவுளநீரைவிட்டு
வியப்புறக்காய்ச்சிப்பின்னை வெருகடியதனோடொக்க
நயப்புறச்சீனிகூட்டி நலம்பெறக்குடித்தபோதே
இயக்கிடும்பித்தவாந்தி தீர்வதுதிண்ணந்தானே. (௭

எரிகுன்மந்தீர இயாழும்.

வேறு.

சிந்திற்சுக்குசிறுகுறுந்தொட்டிவேர்
சாந்தவேலிவிலாமிச்சுசந்தனம்
போந்தகூவிளைபொங்கிருநாழிநீர்
காய்ந்தபோதெரிகுன்மங் கடக்குமே. (௮௰)

இதுவுமது.

வேறு.

பயற்றோடுகடுக்காய்சுக்கு பருந்திருகழஞ்சுகொண்டு
வயல்சுரைத்தண்டுமந்த மருகுறுந்தொட்டிவேரும்

நயக்கவேவெட்டிக்கூட்டி நயம்பெறக்காய்ச்சிக்கொள்ள
வியப்புகைகாலெரிச்சல் மேவியேபறந்துபோமே. (அக)

சத்திகுன்மந்திரகியாழம்.

குமரிவேர்கொன்றைசுக்கு குலவுரோகணியுமிந்து
மமர்குளசாலைசிந்தி லானதோரதிமதூரந்
தமரமாய்க்காய்ச்சிப்பின்னை தானதுநுகர்ந்தபோது
நிமிரமாஞ்சத்திகுன்மஞ்செய்குடல்மறுகும்போமே. (அஉ)

உடலதுமறுகுண்டாகி யுய்த்துணர்ந்திருக்குமாகில்
பொடிபடச்சதைத்தசுக்கை போதவேகழுஞ்சுகூட்டி
முடியிருநாழிநீரில் மூன்றிலொன்றாகக்காய்ச்சிக்
குடியிதுதீருமென்று கூறினர்முனிவர்தாமே. (அங)

மாதவிடாய்நிற்றல்திராக்கியாழம்.

கொள்ளுமுள்ளிகொடியமுருக்கிலை
எள்ளுக்காய்சுக்கிவையுஞ்சிவதைவே
ருள்ளதாகநீர்நாழியுழக்கதாய்
மெள்ளவேகுடிவீடுஞ்சுரோணியே. (அச)

காசந்திரகியாழம்.

வேறு.

கடுக்களிசுக்கிந்துப்பு கல்மதங்கோஷ்டந்தானும்
அடுக்கநீர்வார்த்ததாத்தே யனல்தனில்கொதிக்கக்காய்ச்சிக்
குடித்திடமாதேகேளாய் குளகளகாசம்போகும்
முடித்திடமுனிவர்தாமும்மொழிந்தனர்பெரும்பாலாமே. (அரு)

வெண்பா.

பாரழிஞ்சிற்பட்டை பலமொன்றுதன்னுடனே
கூர்மிளகுதான்பாதிகூட்டியே-சீர்பாலை
வீசுநிரொட்டொன்றாய் மேவிக்குடித்திடவே
காசமெல்லாநாசமுறுங்காண். (அசு)

### விக்கல்சத்திதீர வியாழம்.

வேறு.

துக்கநெற்பொரிதன்னிளநீருட
நெக்கவிட்டபயறுடன்கூவிள
மிக்கக்காய்ச்சிஎப்பின் சர்க்கரைசேர்த்துண்ண
விக்கல்சத்திவிரைவுட னோடுமே. (அஎ)

### அதிசாரந்தீர வியாழம்.

மாதளந்துளிர்மாந்துளிர் நாவலுந்
தாதவிழ்ச்சடையாருடனஞ்சறு
வீதிதன்னில்விளங்கியநன்றுறு
போதவெந்துணைப்போமதிசாரமே. (அஅ)

### அதிசாரம்-பித்தக்கழிச்சல்தீர வியாழம்.

வேறு.

பாவினிற்பட்டைசுக்கு லாட்சுண்டிபூலாவில்வ
மேவியமுத்தக்காசு விளம்பிபகழுஞ்சுசொண்டு
தாவியெட்டொன்றாய்க்காய்ச்சித் தான்குடித்திடுவீராகில்
பூவினிற்கழிச்சல்பித்தம் புகன்றிடாதோடிப்போமே. (அகூ)

இதுவுமது.

அத்திப்பட்டைவாழைப்பூ அமரத்துவைத்தச்சூரணித்து
புத்தத்தேனில்தான்பிசறி புதியவிடையமேல்விசறி
மெத்தச்சீனிதன்னைக்கூட்டி மிகவும்பருகவல்லீரால்
பித்தக்கழிச்சலதிசாரம் பேணியோடுங்கண்டீரே. (கூய)

### இருமல்தீரவியாழம்.

வேறு.

சுக்குசிந்திற்சிறியவழுதலை
ஒக்கக்கொண்டிருநாழியுழக்கதாய்
தக்கவேபதங்காய்ச்சியருந்திடில்
மிக்கவீளையிருமலுமோடுமே. (கூக)

## தேரையர்-யோழம்.

### அழலீர யோழம்.

ஆடாதோடைதேள்கொடுக்குத்தூதளை
வாடாகக்குடன்வல்லிதன்கொண்டவேர்
நீடாதிப்பிலிநீர்பொடியிட்டிட
ஓடாதாகமழலையுமோடுமே. (கஉ)

இதுவுமது.

வேறு.

கோட்டமுடனேசிறுதேக்கு கோரைக்கிழங்குநிலவேம்பு
தேட்டமாகமிருசீந்தில் செருங்கண்டங்காரிசுக்கு
நாட்டமாகப்பற்படகம் நல்லசிறுகாஞ்சொறியுடன்
வாட்டமாக்கத்திப்பிலியும் வளர்பறங்கிக்குடிநீரே- (கங)

### அண்டவாய்வு அரோசிகத்திர யோழம்.

வேறு.

கண்டசுக்குகடுகுடன்பேய்ப்புடல்
விண்டதிப்பிலிமேவுங்கொத்தமல்லி
கொண்டநீரைக்குறுக்கிக்குடிப்பீரால்
அண்டவாய்வுமரோசிகந்திருமே. (கச)

### காசந்திர குடோரி.

வேறு.

இரதநாபிகெந்தகமு மியல்சாதிக்காய்தாரமைந்துந்
துதிசேர்சீனக்காரமுடன் சுவானுபிசம்வெண்காரம்
அதிசிரமிரண்டுடனே யப்பிரேகந்தான்சமன்கூட்டி
குதிசேரிஞ்சிச்சாறதனிற் கூட்டியரைத்துஉண்டைசெய்யே (கரு)

இதுவுமது.

வேறு.

துத்தந்துருசு தய்யபாஷாணை
மெத்தியகெந்தி மிருதாசவங்கையும்
பத்தியபாவற் சாற்றிலரைத்து
நித்திபயினகளவுண்டைகள்செய்யே. (கசு)

சீதாங்கசுரத்திற்கு மாத்திரை.

சீதசுரங்கள் சிதறிடக்கேளாய்
ஒழியகெந்தி யுயாசவாளம்
கோதறுதிப்பிலி கொடுகடுசிவகை
மாதுளுபாலில் மாத்திரைசெய்யே. (கஎ)

வேறு.

செய்யமாத்திரை தேனிலுரைத்திடப்
பையவந்த சுரங்கள்பறந்திடுந் ,
துய்யவேலைத் துரத்தும்விழியினாய்
கைமுறையாம் யமகமுடிந்ததே. (கஅ)



தேரையர் திருவாய்மலர்ந்தருளிய

யமகம்-முற்றுப்பெற்றது.





